## VII.—GOVERNMENT BILL.

### (1) THE MADRAS APPROPRIATION (NO. 2) BILL, 1961.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move that leave be granted for the introduction of the Madras Appropriation (No. 2) Bill, 1961.

DEPUTY SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Appropriation (No. 2) Bill, 1961.'

The motion was put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I introduce the Bill.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

## VIII.—GENERAL DISCUSSION ON DEMANDS FOR GRANTS FOR FURTHER EXPENDITURE FOR 1960–61.

DEPUTY SPEAKER : The general discussion on Demands for Grants for Further Expenditure for 1960–61 will be continued.

SRI A. GOVINDASAMY : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, இந்தத் திட்டத்தைப்பற்றி பேசுகின்ற நேரத்தில் கனம் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்களை ஒரு விஷயத்திலே முதன் முதலாக நான் பாராட்ட விரும்புகிறேன். அதாவது மாட்சிமை தங்கிய இரண்டாம் எலிசபெத் ராணி அவர்கள் நம்முடைய சென்னை ராஜ்யத்திற்கு விஜயம் செய்த நேரத்தில், நமது சர்க்கார் நிறைய ஏற்பாடு செய்து, அதற்கு பெருமளவு செலவு செய்து, சிறந்த முறையிலே வரவேற்பு அளிக்கப்பட்டது. அந்த இனங் களுக்காக நாற்காலி போன்றவைகள் வாங்குவதற்காக 20,000 ரூபாய் இதிலே ஒதுக்கியிருக்கிறார்கள். வேறு பல செலவுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. அந்த நிகழ்ச்சியை மத்திய சினிமா போர்டார் படமெடுத்தார்கள். படம் எடுத்தவர்கள் அதை நேற்றைய தினம் காஸினோ தியேட்டரில் போட்டு காண்பித்திருக் கிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்கும், இதற்கும் என்ன சம்பந்தம்?

SRI A. GOVINDASAMY : தொடர்புபடுத்திப் பேசுகிறேன். அந்த நேரத்தில் நமது அமைச்சர் சுபபிரமணியம் அவர்களும், விவசாய அமைச்சர் பக்தவத்சலம் அவர்களும் அந்தப் படத்தைச் சென்று பார்த்ததாக கேள்விப்படுகிறேன். அவர்கள் படத்தை பார்த்துவிட்டு உண்மையிலேயே வருத்தம் தெரிவித்திருப்பதாக அறிகிறேன். இவ்வளவு செலவு செய்து, இவ்வளவு ஏற்பாடு செய்து எடுக்கப்பட்ட படத்தில் ஒன்றிரண்டு நிகழ்ச்சிகள்தான் சென்னை யைப் பொறுத்தவரையில் காட்டப்படுகிறது, சென்னையைப் பொறுத்தவரையில் இப்படி செய்துவிட்டார்களே என்று சொல்லி அந்தப் படத்தை திருப்பி அனுப்பிவிட்டதாகக் கேள்விப்பட்டேன்.

அவர்களுக்கு அந்த உணர்ச்சி வந்ததற்காக நான் அவர்களை பாராட்டுகிறேன். நாங்கள் வடக்கு, தெற்கு என்று சொல்லி மத்திய சர்க்காரை கண்டிக்கும் நேரத்தில் ஆத்திரப்படும் அமைச்சர் அவர்களுக்கு இது விஷயத்தில் இம்மாதிரி உணர்ச்சி ஏற்பட்டதற்கு நான் அவரை பாராட்டுகிறேன். இந்த விஷயத்திலே எங்களுடைய பாடம் வீண்போகவில்லை, எங்களிடம் அவர்கள் கேட்ட பாடம் வீண் போகவில்லை என்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். ஏற்கனவே அரசியல் தியாகிகள் படம் எடுக்கப்பட்டபொழுது தமிழக நிலைமையை அப்பொழுது அலட்சியப்படுத்தியது போல், இப்பொழுதும் செய்திருக்கிறார்கள். அது விஷயமாக கனம் அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் அதிருப்தி தெரிவித்தது குறித்து அவரை பாராட்டுகிறேன். நாம் இவ்வளவு செலவு செய்திருக்கிறோம், இவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறோம். நாம் இவ்வளவு செலவு செய்தும் இதைப் படம் எடுத்த மத்திய அரசாங்கம் தமிழகத்தை அலட்சியப்படுத்தியிருக்கிறார்கள். இதை மத்திய அரசாங்கத்திற்கு விளக்கமாக எழுதி அனுப்பி, தமிழகத்தில் நடந்த நிகழ்ச்சிகளை முழுக்க, முழுக்க படத்தில் சேர்க்கவேண்டும், சேர்த்து எடுத்துக் காட்டவேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காகத்தான் நான் இதை இங்கே குறிப்பிடுகிறேன்.

இரண்டாவதாக 'சர்குலேஷன் வான்' ஒன்று வாங்கியதற்காக நிதி கோரியிருக்கிறார்கள். 'சர்குலேஷன் வான்' அவசியம்தானா? வாங்கிவிட்டோம், என்ன செய்கிறது என்று சொல்லலாம். இது வரையில் இல்லாமல் இப்பொழுது சர்குலேஷன் வானுக்கு என்ன அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தாற்போல சட்டசபை ஹாஸ்டல் விஷயத்திலே, விடுதியில் தங்கும் உறுப்பினர்களின் எண்ணிக்கையும், வெளியாட்களின் எண்ணிக்கையும் அதிகரித்ததினால் செலவு செய்திருக்கிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். விடுதியில் தங்கும் உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகரித்ததற்காக என்ன சௌகரியம் செய்திருக்கிறார்கள், எதனால் இவ்வளவு செலவு செய்யப்பட்டது என்பதைச் சொல்லவேண்டும். மாாமத்து இலாகா அமைச்சர் 'படுக்கையும், கொசுவலையும் வாங்கிக் கொடுப்பதற்கு நாங்கள் ஏட்டு அளவிலே உத்தரவு வாங்கி வைத்திருக்கிறோம்' என்று சொன்னாலும், பேபரிலேதான் உத்தரவு வாங்கி, திட்டம் போட்டு வைத்திருக்கிறார்களா? அதற்கு வேண்டிய செலவு செய்து படுக்கை, கொசுவலை வாங்கியாகிவிட்டதா என்பதை தெரிவிக்க வேண்டும். வெளியாட்களுக்கு என்ன வசதிகள் செய்திருக்கிறார்கள் என்பதையும் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சட்டமன்ற உறுப்பினர்களுக்கான பழைய-புதிய விடுதிகளில் மின்சாரக் கொதிகலன்களை நிறுவியதால், அதற்காக செலவு ஏற்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த 'பாய்

25th March 1961] [Sri A. Govindasamy]

லர்கள்' நல்ல முறையில் வேலை செய்வதில்லை என்பதை அமைச்சர் அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். காலை 7, 8 மணிக்கு ஒரு நாளைக்கு திடீரென்று அமைச்சர் அவர்கள் ஹாஸ்டலுக்கு வந்து பார்க்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். 'பாய்லரை' திருப்பி விடும்பொழுது சுத்த பச்சை ஜலம்தான் வருகிறது. அந்த நிலைமை தான் அந்த பாய்லர்கள் வேலை செய்கிறது. செலவு செய்திருக் மெம்பர் குளிக்கப் போகும்பொழுது சுடு தண்ணீர் வருகிறதா, பச்சைத் தண்ணீர் வருகிறதா என்று கேட்கவேண்டிய நிலைமையில் தான் அந்த பாயலர்கள் வேலை செய்கிறது. செலவு செய்திருக் கிறோம் என்று சொல்லுகிறார்கள். செலவு என்னவோ ஆகிறது. 'எண்ணெய் செலவு என்னவோ ஆகிறது, ஆனால் குழந்தை பிழைக்கவில்லை' என்று சொல்லுவதுபோல், செலவு ஆகிறது, ஆனால் நல்ல பாய்லர்கள் அமைக்கப்படவில்லை. விடுதியில் தங்கக் கூடியவர்களுக்கும் வசதி ஏற்படவில்லை என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஹாஸ்டல்களில் வேலை செய்கின்ற காவ லாளர்களுக்கு 1960-61-க்காக உடுப்பு வழங்கியதால் அதற்காக தொகை கோரப்பட்டிருக்கிறது. இதெல்லாம் எதிர்பார்த்த செலவு தானே? ஏன் இதை 'சப்ளிமெண்டரி டிமாண்டில்' கொண்டுவர வேண்டும் என்று கேட்கிறேன். உடைகள் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று திட்டம் இருக்கும்பொழுது அதை சப்ளிமெண்டரி டிமாண்டில் கொண்டுவருவதற்கு அவசியம் என்ன என்பதை அமைச்சர் அவர்கள் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

அடுத்தபடியாக, ஜைல் மான்யத்தில், 'சிறைச்சாலைகளில் வழங்கப்படும் உணவுப் பொருள்களின் விலை அதிகரித்துவிட்டது. ஆகவே, மேற்கொண்டும் நிதி ஒதுக்கம் செய்யவேண்டியுள்ளது' என்று கூறப்பட்டிருக்கிறது. சிறைச்சாலைகளில் கைதிகளுக்கு சரியாக உணவு வழங்கப்படவில்லை என்ற குற்றச்சாட்டை ஜெயில் மான்யம் விவாதிக்கப்பட்டபொழுதே சொல்லியிருக்கிறோம். 'ஜைல் விசிட்டர்ஸ்' கமிட்டி கொடுத்துள்ள ரிப்போர்ட்டும் அமைச்சர் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அதைப்பற்றி பரிசீலிக்க வேண்டும். அவர்கள் நல்ல உணவு கொடுக்கப்படவில்லை. அவர்கள் உண்டாக்குகிற காய்கறிகள்கூட அவர்களுக்கு கிடைக் காமல் இருக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. எப்படி இதை செலவு செய்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்கள் கொஞ்சம் கவனிக்க வேண்டும். அதற்கு பதில் சொல்லவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். கைதிகளுக்கான படுக்கை களைப் புதுப்பிக்க வேண்டியிருந்ததால், அதிகப்படியான செலவு ஏற்பட்டது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதுபற்றி அமைச்சர் அவர்கள் தகவல் சொல்லவேண்டும். ஏதோ புதியதாக வசதி செய்யப்பட்டிருப்பது போல அதற்காக அதிக செலவு செய் திருக்கிறோம், அந்தத் தொகையை அனுமதிக்கவேண்டும் என்று சொல்லுவதை உண்மையிலேயே கண்டிக்காமல் இருக்க முடியாது.

சம்பளக் கமிஷன் சிபார்சுகளை நிறைவேற்றுவதற்காக அதிக செலவினங்கள் ஏற்பட்டதாகச் சொல்லுகிறார்கள். அதை நாங்கள்

அனுமதிக்க எந்த விதத்திலும் ஆட்சேபனை கிடையாது. அந்தச் செலவு எதிர்பார்க்கப்படவில்லை. நிச்சயம் ஏற்படும் என்று எதிர்பார்க்கக்கூடிய செலவுக்குக்கூட ஏன் 'சப்ளிமெண்டரி டிமாண்டில்' தொகை கோரவேண்டும்.

1960-ல் சென்ஸஸ் கணக்கு எடுக்கப்படும் என்ற நிலைமை தெரியும். அதற்கு வேண்டிய செலவுத் தொகையை முன்கூட்டியே ஒதுக்குவதில் ஏன் தயக்கம் பஞ்சாயத்து சட்டம் 1958-ல் நாம் நிறைவேற்றியிருக்கிறோம். பஞ்சாயத்து தேர்தல்கள் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அதற்கு வேண்டிய தொகையை நாம் ஒதுக்க கடமைப்பட்டிருக்கிறோம். பஞ்சாயத்து தேர்தல்களுக்கும், யூனியன் தேர்தல்களுக்கும் அதிகாரிகள் நியமிக்கவேண்டியிருந்த தால் அதிகச் செலவு ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இதெல்லாம் எதிர்பார்த்த செலவுதானே? இதற்கெல்லாம் வேண்டிய செலவுத் தொகையை முதல் டிமாண்டிலேயே கோரி யிருக்கவேண்டும். சப்ளிமெண்டரி டிமாண்டில் கொண்டுவர வேண்டிய அவசியம் கிடையாது. ஏதோ இந்தமாதிரி குற்றச் சாட்டுகள் சொல்லுகிறபொழுது, இப்பொழுது செலவு செய்தாகி விட்டது, இனியாவது எதிர்காலத்தில் இந்த நிலைமை ஏற்படாமல் பார்த்துக்கொள்ளுவதற்கு அமைச்சர் அவர்கள் வழி காணு வார்கள் என்று நம்பி, என்னுடைய உரையை முடிக்கிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Deputy Speaker, with regard to the Supplementary Estimates presented by the Hon. Minister, I wish to say few words. The total of the revised estimate for the year 1960–61, roughly works out to Rs. 86 crores. As against this a sum of about Rs. 24 and odd crores has been asked for in the Statement of Demands.

THE HON. SRI C. SUBRAMANIAM: That is the revenue budget, we will have to consider the gross amount.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: I am coming to that. It roughly works out to 25 per cent of the original estimate. The amount demanded now seems to be a bit large. I feel that the expenditure has not been worked out correctly and hence this large amount has been demanded.

With regard to Motor Vehicles tax, a sum of Rs. 1,05,000 has been asked under Administrative Charges. This includes the payment of grant-in-aid of Rs. 50,000 to the Corporation of Madras for improving traffic arrangements. Even though something has been done recently to improve traffic arrangements, what has till now been done is not quite sufficient and something more should be done, in view of the very heavy increase in traffic. We would like to know what the Government are going to do in this matter. My submission is that the allotment under this head should be increased, and the traffic congestion should be relieved as much as possible. Of course, they have provided new sign boards, traffic signals, etc. My submission is that these are not enough and the allotment under this head should be increased.

25th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

With regard to the Demand relating to State Legislature, I find that there is an increase in expenditure on account of the Legislative Council. I am not competent to say anything about it here. I would only like to request the Government to see whether it is necessary to spend so much on the Legislative Council.

I want to emphasise another point in this connection with regard to Demand XII—District Administration and Miscellaneous. The Metric system of weights has been introduced by legislation in all places. But still, we find that so much of confusion is prevailing among the public and they do not understand what is what and which is which. The public have not been educated fully on the equivalents of these Weights and Measures that have been in force prior to the introduction of the Metric system and as a result of this, the purchasers lose a lot and the merchants take advantage of this confusion. Steps must be taken to see that the Metric system is followed wherever it has been enforced and those who are not adopting this system should be punished. Sufficient education should be given to public in each and every place on the equivalents of these weights and measures.

Then with regard to Demand XVII—Medical, the former College of Integrated Medicine was converted into one of Mordern Medical recently. It is not known what has happened to the former staff—doctors, compounders and others who are qualified in the Indian System of Medicine. I am told, I do not know how for it is correct—that some of them have to be sent away, because they cannot be provided under the reorganised scheme.

The Estimate Committee have also made recommendations that a programme should be drawn up with regard to fodder resources both in the Government and livestock farms and seed research stations and also in the farms maintained by private persons who are interested in raising fodder crops. Steps must be taken by the Government in this direction and those steps must be stated by the Hon. Minister for Finance. Additional appropriation is not asked for acquiring lands and to meet the expenditure as a result of the cost of fodder, etc. Then with regard to Seed Farms, additional appropriation is required to acquire the existing 62 seed farms. In this connection, information may be obtained on the steps taken by the Government to implement the recommendations of the Estimates Committee. We have committed a serious of blunders in selecting such farms. The lands selected for such seed farms are not of good quality and they do not give us good results. Steps should be taken to see that some of the useless farms already taken up are discarded and good lands are selected for producing improved seeds. A careful watch should be observed at least by the Finance Department even though I heard recently that some steps had been taken to overcome this difficulty. There is no point in having all sorts of useless lands for producing improved seeds.

With regard to item (ii) under Demand 'Industries and Cinchona, the supply position of steel is very bad and very unsatisfactory and we do not get sufficient steel especially for the use of

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [25th March 1961

agriculturists. Applications for steel are not disposed of expeditiously and there is enormous delay, with the result the agriculturists are put to a lot of inconvenience and trouble. Something must be done in this direction.

Then with regard to Demand XXIV—Harijan Uplift, a large amount is being spent for sinking of wells and other things for the amelioration of the conditions of the Harijans. In certain cases though the amount alloted is very heavy, it does not serve the purpose for which it is intended. Therefore, a careful scrutiny is required to see that the amount allotted for this purpose is carefully spent because we found that a lot of irregularities were committed when the Public Accounts Committee went into the question of expenditure side. So that also should be taken into account because there is scope for mismanagement there and that should be avoided.

Lastly, I would like to say something about Community Development and Rural Water Supply. There are still several villages which have not been supplied with potable water, with the result both the people living in cheris and villages are suffering very much. Either the wells that have been sunk already are brackish or they do not supply enough water to meet the growing needs of the people there. Therefore, steps must be taken to see that all villages are provided with potable water. This is all my submission, Sir.

* **SRI S. M. ANNAMALAI**: சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த உபமானியக் கோரிக்கையில் 27 கோடி ரூபாய் அளவில் கேட்கப்படுகிறது. இதை சப்ளிமெண்டரி டிமாண்ட் என்று சொல்வதற்குப் பதிலாக ஒரிஜனல் பட்ஜட் என்றே சொல்லிவிடலாம். உண்மையிலேயே திட்டம் தீட்டும் போது சரியான முறையில் செய்திருந்தால் இம்மாதிரி வந்திருக்காது. நியாயமான தேவைகளுக்குக்கூட அதிக செலவு என்று கேட்டிருக்கிறார்கள். திட்டம் தீட்டும்போதே சரியான முறையிலே செய்யாமல், சப்ளிமெண்டரி டிமாண்டில் ஆக்சுவல் ரிக்வயர்மெண்ட்ஸ் என்று சொல்வதானது சரியானதில்லை. இதிலே போய் நியூ சர்வீஸ் என்று புது வேலைகளுக்கு கேட்பது சரியாக இல்லை, உசிதமில்லை. வேண்டுமானல் முக்கியமான விஷயங்களை நியூ சர்வீஸ் என்று செய்யலாம். இவைகளை சப்ளிமெண்டரி டிமாண்டில் சேர்ப்பது அவ்வளவு முக்கியமில்லை. முக்கியமாக இந்த சப்ளிமெண்டரி டிமாண்டில், பர்சேஸ் ஆப் ஜீப்ஸ் அண்ட் லாரீஸ் என்று பாரஸ்ட் டிபார்ட்மெண்ட், அக்ரிகல்சர் டிபார்ட்மெண்ட், போலீஸ் டிபார்ட்மெண்ட், இப்படிப் பல இலாகாக்களுக்கு பல லட்சக் கணக்கான ரூபாய்கள் ஒதுக்கப்பட்டிருக்கிறது. பார்க்கும்போது இவற்றை 61-62 பட்ஜட்டிலேயே சேர்த்து வாங்கியிருக்கலாம். சப்ளிமெண்டரி டிமாண்டில் சேர்த்துச் செய்வது பொருத்தமில்லை, முக்கியமும் இல்லை.

25th March 1961] [Sri S. M. Annamalai]

சென்ட்ரல் பாலிடெக்னிக்கு, மதுரை, நிலம் ஆர்ஜிதம் செய்த வகையில் ரூ. 6,300 கொடுத்திருக்கிறது. அது அக்வயர் பண்ணும் போது ரேட்டை அதிகப்படுத்தி தந்திருக்கிறார்கள். லாண்ட் அக்விஸிஷன் செய்யும்போதே, சரியான முறையிலே விசாரணை செய்து, காம்பன்ஸேஷன் எவ்வளவு என்று முதலிலேயே நிச்சயித்து இருந்தால், இப்பொழுது இந்தத் தொகையைக் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது. என்னைப் பொருத்த வரையில் இது சிபாரிசின் பேரில் செய்யப்பட்டிருக்கிறது என்று தான். . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்தக் குற்றம் சாட்டுவதற்கு காரணம் இருந்து சொல்கிறார்களா, அல்லது ஊகத்தில் சொல்லுகிறார்களா? காரணம் இல்லை என்றால், அங்கத்தினர் சொல்லுவது பொருத்தமில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI S. M. ANNAMALAI: நான் சொல்லுவது, அக்விஸிஷன் செய்யும்போதே, காம்பன்ஸேஷன் எவ்வளவு கொடுக்கவேண்டும் என்பதை சரியான முறையில் நிர்ணயித்து இருக்கலாம்; இப்பொழுது இந்த 6,300 ரூபாய் தருவது என்றால், அதை தருவது சாதகமாகச் செய்திருக்கிறது என்பதை ஊகிக்க முடிகிறது என்று சொல்ல விரும்பினேன்.

ஸீட் பார்ம்ஸ் பொருத்தவரை, இவற்றை ஆரம்பிக்க லாண்ட் அக்விஸிஷன் செய்ய, உச்ச வரம்பு மசோதா வருகிறது, அதனால் மீதம் ஏற்படும் என்று எதிர்பார்த்தோம், ஆனால் இந்த ஸீட் பார்ம்ஸுக்காக யாருடைய நிலங்களை எடுத்தோமோ அதில் மிச்சம் வரவில்லை, ஆகவே 75 எக்கராவை அக்வயர் செய்யப் போகிறோம் என்று இந்த சப்ளிமெண்டரி டிமாண்டில் இருக்கிறது. இந்த 75 ஏக்கராவுக்காக 4,90,100 ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஏக்கரா ஒன்றுக்கு ரூ. 6,535 என்றால், இன்றைக்கு அக்வயர் செய்யும் நிலங்களை முதலிலேயே ஸீட் பார்ம்ஸ் ஆரம்பிக்கும் போதே அக்வயர் செய்திருந்தால், சீப் ரேட்டாக வாங்கியிருக்கலாம். இவ்வளவு நாட்களுக்குப் பிறகு, செய்ய வேண்டிய சீர்திருத்தங்களையெல்லாம் அத்தனையும் செய்த பிறகு ஒரு எக்கர் 6,535 ரூபா கொடுத்து வாங்குவதில், அது மக்கள் பணம் வீண் விரயம் ஆகிபோகிறதே என்றுதான் சொல்லுகிறேன்.

அதேபோல, சிலோன் கவர்ன்மெண்ட் எமிக்ரேஷன் டெபோக்கு காம்பன்ஸேஷன் கொடுக்க என்று 5 லட்சத்து சொச்சம் ஒதுக்கப் பட்டிருக்கிறது. அப்படிக் கொடுத்தாலும் நிலம் கிடைக்குமா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. இந்தப் பணத்தை 61-62 பட்ஜட்டில் ஒதுக்கியிருக்கலாம். இந்த சப்ளிமெண்டரி டிமாண்டில் சேர்த்திருப்பது அவ்வளவு உசிதமில்லை என்பதைச் சொல்லிக்கொண்டு என் பேச்சை முடிக்கிறேன்.

[25th March 1961

**Sri P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, 1960-61-ஆம் ஆண்டுக்கு உரிய வரவு செலவு திட்டத்திலே இது மூன்றுவது உபமானிய கோரிக்கை. இதைக் கனம் அமைச்சரவர்கள் பெருமையோடு சொல்லிக் கொண்டிருக்கிருர்கள். ஆனல் அந்தப் பெருமையை பெருமை என்று ஒப்புக் கொள்ளத் தயார் இல்லை நான். முதன் முதல் வரவு செலவு திட்டத்தைத் தயாரிக்கும்போதே நன்கு கவனம் செலுத்தாமல், வரும் வரவு என்ன, செலவு என்ன என்று சரிவர ஆராயாமல், செய்திருப்பதே இதற்குக் காரணம். மூலதனச் செலவுக்கு உபமானியக் கோரிக்கை என்ருல் அவற்றை இந்த சபை ஏற்றுக்கொள்ள முடியும். இந்தச் சபையைக் கேட்காமலே, வேறு இனங்களிலே, ரெவின்யூ அகௌண்டிலே செலவழித்துவிட்டு, அவற்றை ஏற்றுக் கொள்ளத் தான் வேண்டும் என்று சொல்வது போன்ற முறையில் சமர்ப்பித்திருப்பது வருந்தத்தக்கது.

மேலும், சர்க்கார் நிர்வாகத்தில் சிக்கனம் ஏற்படவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டிருக்கிறது. அந்த ஆலோசனையை சர்க்கார் ஏற்றுக்கொண்டு அதற்கென்று ஒரு கமிட்டியை ஏற்படுத்தியிருக்கிறேம் என்று சொன்னுர்கள். இந்த சிக்கனம் கையாளப்படுகிறதா என்பது சந்தேகம். ஏனென்ருல், நியூ சர்வீஸ் என்ற பெயரில் பல இலாகாக்களிலும் புது நியமனங்கள் செய்யப்பட்டிருக்கிறதை பார்க்கிறேம். ரெவின்யூ தலைப்பில் புதுக்கோட்டைப் பகுதியில் செட்டில்மெண்ட் வேலைக்காக புதிதாக ஒரு டெபுடி கலெக்டர், ஐந்து டெபுடி தாசில்தார்கள், இன்னும் செக்ஷன் தலைவர்கள், செட்டில்மெண்ட் இன்ஸ்பெக்டர்கள், ப்யூன்கள் என்று புதிய நியமனங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. வேறு இலாகாக்களிலும் இம்மாதிரி இருக்கிறது. அவகாசம் இல்லாததால், அவற்றை விளக்கமாகச் சொல்ல முடியவில்லை. சிக்கனம் கையாளப்படுவதற்கு போதுமான நடவடிக்கை எடுக்கப்படவில்லை. மேலும் மேலும் அரசாங்க இலாகாக்கள் விரிவடைகின்றன. வேலைகள் அதிகமாக இருப்பது, செலவினங்கள் அதிகமாக இருப்பது, ராஜ்யத்தின் வளமையைக் காட்டுகிறது எனலாம். ஆனுலும் இம்மாதிரியான செட்டில்மெண்ட் வேலைகளுக்கு நிர்வாக அதிகாரிகளை நியமனம் செய்யும்போது, ஏற்கனவே இருக்கும் அதிகாரிகளைக் கொண்டே இவைகளையும் செய்து கொண்டால், இத்தனைப் புதிய செலவுகள் இல்லாமல் இருந்திருக்கும். அப்படிச் செய்வதைவிட்டு, இம்மாதிரிப் புது அதிகாரிகளைப் போட்டு, நாம் இவைகளை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தமும் பளுவும் ஏற்படுகிறது. இந்தப் பளுவை பிறகு எந்தக் காலத்திலும் தள்ள முடியாத நிலைமை ஏற்படும். ஆகவே, அதிகாரிகளை மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டு போகாமல் எங்கே அவசியமாக, தவிர்க்க முடியாதபடி இருக்கிறதோ அங்கெல்லாம் மட்டும் அதிகாரிகளுக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று வலியுறுத்திக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

25th March 1961] [Sri P. S. Chinnadurai]

மேலும் எதிர்பார்த்த பல செலவினங்களுக்குக்கூட உப மானியக் கோரிக்கையில் பணம் கோரப்படுகிறது. எதிர்பாராத செலவினங்களைப் பற்றி அல்ல, முன்கூட்டியே எதிர்பார்த்த செல வினங்களை பொது வரவு செலவுத் திட்டத்தில் கொண்டுவராமல் இப்போது கொண்டுவருவது சரியல்ல. முன்பே நமக்குப் பஞ்சா யத்து தேர்தல் நடைபெறும் என்று தெரியும். அதற்காக வாக் காளர் ஜாபிதா அச்சடித்துக் கொடுக்கவேண்டியதாக இருக்கும் என்றும் தெரியும். அரசாங்கம்தான் அச்செலவுப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டியதாக இருக்கும் என்றும் தெரியும். ஆனல் பிரதான வரவு-செலவுத் திட்டத்தில் அந்த இனம் ஏன் சேர்க்கப்படவில்லை? இதைப்பற்றி கனம் நிதி அமைச்சர் அவர்கள் விளக்கம் தருவார்கள் என்று நினைக்கிறேன். 12–00 noon.

அடுத்து ஜி.லி.ஐ.எம். பட்டம் பெற்ற மாணவர்கள் சம்பந்தப் பட்ட வரை ஒரு குறைபாடு இருந்துகொண்டே இருக்கிறது. இவர் களும் எம்.பி.பி.எஸ். பட்ட மாணவர்களைப் போலவே நான்கைந்து ஆண்டுகள் படிக்கிருர்கள். ஆகவே இவர்களுக்கு எம்.பி.பி.எஸ். பட்டம் என்று கொடுக்காமல் ஜீ.லி.ஐ.எம். பட்டம் கொடுத்தாலும் எம்.பி.பி.எஸ். பட்டத்திற்குச் சமமாக இதையும் செய்து சம்பளம், மற்ற தகுதி, வேலை நியமனம் எல்லாவற்றிலும் ஒரே விதமாகச் செய்வதுதான் சரியாக இருக்கும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். இதற்கான ஏற்பாடு களை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவேண்டும். மத்திய அரசாங்கம் இதற்குச் சம்மதிக்காவிட்டாலும் நமது ராஜ்ய அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் இப்படிச் செய்யவேண்டுமென்று சொல்லிக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த துணை மானியக் கோரிக்கையை பாராட் டியும், ஆதரித்தும் ஒருசில வார்த்தைகள் எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்தத் துணை மானியக் கோரிக்கையில் மிகச் சிறந்த அங்கங்கள் அமைந்திருக்கின்றன என்பதைச் சொல்லாமல் இருக்க முடியாது. துணை மானியக் கோரிக்கையையே 24 கோடி ரூபாய் அளவுக்குக் கொண்டுவந்துவிட்டார்கள் என்று சொல்லலாமே தவிர அதில் அடங்கியுள்ள அம்சங்களைப் பார்க்கிற போது பாராட்டாமல் இருக்க முடியாது. ஒருசில உதாரணம் சொல்கிறேன். கன்னூர், திருவள்ளூர், முதலியவற்றின் ரோடு களுக்கு மத்திய அரசாங்கம் உதவி கொடுக்கிருர்கள். இருந்தாலும் அந்த உதவித் தொகையைப் பூரணமாகப் பெறவேண்டும் என்பு தற்காக புத்திசாலித்தனமாக இந்த உபமானியக் கோரிக்கையில் சேர்த்திருப்பதைப் பாராட்டுகிறேன். ஆனல் இன்னென்று. அதி காரிகள் தாங்கள் செய்கின்ற பிழையை எப்படியாவது இந்த துணைமானியக் கோரிக்கை மூலம் சரிசெய்து தப்பித்துக்கொண்டு விடலாம் என்பதற்கு இடமளிக்கக்கூடாது. குறிப்பாக பாரஸ்டு இலாகாவில் கம்பளிகள் 1959-60-ல் சப்ளை பண்ணவேண்டியதற்கு இப்போது சப்ளை பண்ணிவிட்டு உபமானியக் கோரிக்கையில்

அதைக் கொண்டுவருகிறுர்கள். சாதாரணமாக 1959-60-ல் சப்ளை செய்யப்படவேண்டியது ஏன் அவ்வாண்டிலே சப்ளை செய்யப் படவில்லை, பிறகு 1960-61-லும் பொது வரவு-செலவுத் திட்டத்தில் ஏன் வரவில்லை, என்பதற்கு அரசாங்கம் கொஞ்சம் விழிப்போடு இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அதிகாரிகளுக்குப் பயம் இல்லாமல் போய்விடும். நாம் ஒவ்வொரு இனத்திற்கும் பணம் ஒதுக்குகிறபோது அதைச் சரியான முறையில் அந்த அந்தக் காலத்திற்குள்ளேயே செலவு செய்யவேண்டும் என்கிற பொறுப்பு அவர்களுக்கு இருக்கவேண்டும். அது இல்லாமல் எப்போது வேண்டுமானுலும் செலவு செய்துகொண்டு உபமானியக் கோரிக் கையில் கொண்டுவந்துவிடலாம் என்று அவர்கள் நினைப்பதற்கு இடம் கொடுக்கக்கூடாது. காரணம் இந்த உபமானியக் கோரிக் கையில் 1959-60-ல் சப்ளை செய்யப்படவேண்டிய கம்பளிகள் 1959-60-ல் சப்ளை செய்யப்படவேண்டிய செருப்புகள், துணிகள் இவைகளையெல்லாம் சேர்த்திருப்பது சரியல்ல. அந்த அந்த ஆண்டிலே செலவிடுவதற்கு வழிசெய்யவேண்டும்.

அதேபோன்று ப்ரைமரி ஹெல்த் சென்டர் ஆவடியில் கட்டுவ தற்காக பணம் ஒதுக்கியிருக்கிறுர்கள். நாங்கள் திருமுல்லை வாயிலில்—இளைஞர் காங்கிரஸ் சங்கத்தின் சார்பாக பத்தாயிரம் ரூபாய் செலவு செய்து கட்டிடம் எழுப்பி அரசாங்கத்திற்குக் கொடுத்திருக்கிறோம். அங்கே நிரந்தரமாக ஒரு டாக்டர் போடாது வாரத்திற்கு இரண்டுநாள் டாக்டர் வருவார் என்று சொன்னுர்கள். ஒரு நாள்கூட வருவது இல்லை. கட்டிடத்தின் முன்பகுதிகள் எல்லாம்கூட இடிந்துபோகும் நிலைமையில் இருக் கிறது. அந்த இடத்தைச் சுற்றி பத்து மைல்களுக்கு வைத்திய வசதி கிடையாது. இப்படி பத்தாயிரம் ரூபாய் செலவு செய்து கட்டப்பட்ட கட்டிடம் கொடுத்திருக்கிற இடத்திலே ப்ரைமரி ஹெல்த் சென்டர் சிறப்பாக நடைபெறுவதற்கு வழிசெய்யாமல் மேலும் ஆவடியில் கட்டிடம் கட்டுவதற்கு பணம் ஒதுக்கி ஏற்பாடு செய்கிறுர்கள் என்றுல் இப்படி கட்டிடம் கட்டிக்கொண்டே போவதால்தான், எங்கும் டாக்டர்கள் இருக்கமாட்டார்கள் என்ப தாகச் சொல்வதற்கு இடமேற்படுகிறது. இன்னும் சில ஆயிரம் ரூபாய் இங்கே செலவு செய்தால் போதும். இதை அமைச்சர் அவர்கள் கவனித்து தக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் பக்கிங்ஹாம் கால்வாய் மராமத்துக்காக 5 லட்சம் ரூபாய் கொடுப்பதாகக் கூறியிருக்கிறுர்கள். சென்னை நகரத்தில் உள்ளவர்களுக்கு இதில் அக்கறை அதிகம். மிகமிகக் கஷ்டப்பட்டு அதன் நாற்றத்தைச் சகித்துக்கொண்டிருக்கிறுர்கள். ஆகவே இந்த பக்கிங்ஹாம் கால்வாய் கூவம், இங்கே என்ன வேலை நடந்து கொண்டிருக்கிறது என்பதை அவ்வப்போது பரிசீலிக்கவேண்டும். ரூரல் வாடர் சப்ளைக்குப் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது வரவேற்கத் தக்கது. கீழ்ப்பாக்கம் மெடிகல் காலேஜ் அபி விருத்திக்காகப் பணம் ஒதுக்கப்பட்டிருப்பதை வரவேற்கிறேன்.

25th March 1961] [Srimathi T. N. Anandanayaki]

அதேசமயத்தில் தமிழ் வைத்தியத்திற்கு இந்தத் துணைமானியக் கோரிக்கையில் ஒரு அடையாளச் செலவானது குறிப்பிட்டிருக்கு மானால் அது மிகவும் சிறந்ததாக இருந்திருக்கும். தமிழ் வைத்தியத் துறைபற்றிய காலேஜும், ரிசர்ச் சென்டரும் தேவை. அதற்கு அவசரமாக, அவசியமாக உடனடியாகப் பணம் ஒதுக்கி தக்க ஏற்பாடு செய்திருக்கவேண்டியது மிகவும் முக்கியம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

"அட்மினிஸ்ட்ரேஷன் ஆப் ஜெஸ்டிஸ்" இனத்திலும் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. சில மாவட்டங்களில், சில இடங்களில், ஆர்.டி.ஏ. (court) வைக்கும்போது வக்கீல்கள் உட்காருவதற்குகூட செயர் இல்லை, பெஞ்ச் இல்லை, எஸ்.டி.ஏ.டி.-யில்கூட கை ஒடிந்த செயர்களும், கால் ஒடிந்து போன செயர்களும்தான் இருக் கின்றன. இதைக் கவனித்து நல்ல பெஞ்சுகளையாவது போட்டு அவை கோர்ட்டாக காட்சியளிக்கக்கூடிய அளவில் இருப்பதற்கு வேண்டியது செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த உபமான்யக் கோரிக்கையில் அதிகத் தொகை கேட்டிருப்பதாகவும், இதையெல்லாம் முன்னுலேயே எதிர் பார்த்து பட்ஜெட்டிலேயே இதைச் சேர்த்திருப்பதுதான் முறை என்றும் பலர் இங்கு குறிப்பிட்டார்கள். இதில் முக்கியமாக கவனிக்க வேண்டியது, இன்றைய அரசாங்கம் நடைபெறுவது முன்பு நடந்ததைப்போல் அல்ல. முன்பு அரசாங்கம் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயங்கள் கலவரங்கள் ஏற்படாமல், குழப்பங்கள் ஏற்படாமல் போலீஸ் நடவடிக்கை எடுப்பது முதல் வேலை. அதற்குச் சேர்ந்தாற்போல் கோர்ட்கள் ஏற்படுத்துவது. இரண்டாவதாக வரி வசூல் சரியாக செய்யவேண்டும். இந்தச் செலவுகளைச் செய்வதற்கு, ஆங்காங்கு மக்கள் குழப்பம் செய்யா மலிருக்க சில திட்டங்களை எடுத்து அவர்கள் மனது கொஞ்ச மாவது திருப்தியடையக்கூடிய அளவிற்கு சில திட்டங்களை ஏற்று நடத்துவது. அதிலும் அதிகமாக செலவாகுமானுல் அந்த வருடமே முடிக்க வேண்டிய அவசரமில்லை, ஒரு ஆண்டு ஒத்தி போட்டு முடிக்கலாம் என்ற முறையில்தான் அப்பொழுது நட வடிக்கைகள் எடுக்கப்பட்டு வந்தது என்பதை நாம் முதலில் உணர்ந்து கொள்ள வேண்டும். இன்று பட்ஜெட்டை எடுத்துக் கொண்டால், ஒவ்வொரு ஆண்டும் பட்ஜெட் தயாரிக்கும்போது வருட ஆரம்பத்திற்கு முன்பே தயார் செய்யும்போது அடுத்த வருடம் நாம் நிறைவேற்ற வேண்டிய திட்டங்களை அப்பொழுதே முடிவு செய்கிறோம், அதாவது டிஸம்பருக்குள்ளாக முடிவு எடுத்து விட வேண்டியிருக்கிறது. இன்னென்ன திட்டங்கள்தான் பட் ஜெட்டில் சேர்க்க முடியும் என்று. அதற்குப் பின் தயாரிக்கப் படும் திட்டங்களை இதில் சேர்ப்பது என்பது முடியாது, முக்கிய மான திட்டங்களை, அவசரமான திட்டங்களை வேண்டுமானுல் சேர்க்கலாம். மற்றவைகளை பட்ஜெட்டில் சேர்த்து அச்சிட்டு இந்த சபையில் வைத்து அனுமதி பெறமுடியாது. டிஸம்பருக்கு

[Sri C. Subramaniam] [25th March 1961

பிற்பாடு ஜனவரி, பெப்ரவரி, மார்ச் வரையில் சில திட்டங்கள் தயாராகிறது. மார்ச் 31-ம் தேதிக்கு ஒரு தனி மகிமை கிடையாது. அதற்குப் பிற்பாடும் பல திட்டங்களை எடுத்து பரிசிலனை செய்து கொண்டிருக்கிறோம். பட்ஜெட் கொடுத்தாகிவிட்டது, இனிமேல் புதுத் திட்டங்களைப்பற்றி கவனிக்க வேண்டாம், இன்னொரு ஆண்டுக்கு, அடுத்த ஆண்டுக்கு ஒத்தி போட்டு விடுங்கள் என்று சொல்வது சரியா, இல்லை புதுத் திட்டங்களை எடுத்துக்கொண்டு அவைகளை பரிசிலனை செய்து அவைகள் அவசரமாக செய்ய வேண்டிய திட்டங்கள் என்ற முறையில் அவைகளை நிறைவேற்ற வேண்டுமென்று சொன்னால் அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை உடனடியாக எடுப்பது சரியா இல்லையா என்று முடிவு செய்ய வேண்டும். புதுத் திட்டங்களை மத்தியில் எடுத்துக்கொள்வதற்கு அரசியல் சட்டத்தில் ஏற்பாடு செய்திருக்கிறோம். ஆகவே இந்த சபை முடிவு செய்ய வேண்டியது, புதுத் திட்டங்களை ஒதுக்கி வைத்துவிட்டு வேண்டுமானால் ஒரு வருடம் கழித்து எடுக்க வேண்டுமென்று சொன்னால் இன்றுள்ள நிலையில் அது சரியான முடிவாகயிருக்க முடியாது. அந்த அடிப்படையில் இந்தப் புது திட்டங்களை ஒரு வருடத்திற்கு ஒத்தி போடலாம் என்று யாராவது சொல்லியிருந்தால் அதற்குப் பதில் சொல்ல நான் தயாராகயிருந்திருப்பேன். புதுத்திட்டங்கள் எடுத்துத்தான் தீர வேண்டும் என்ற அடிப்படையில்தான் என் பொறுப்பில் இருக்கும் வரை அந்த அடிப்படையில் இந்த சபையின் சம்மதத்தை கோரு கிறேன். இது சரியா என்று இந்த சபைதான் முடிவு கூற வேண்டும். நான் எடுத்துக்கொண்டிருக்கும் முறைதான் சரி என்பதுதான் என் கருத்து. அதை ஆலோசனை செய்து சபை முடிவு எடுக்கவேண்டும். நாம் முடிவு செய்வது மட்டுமல்ல. திட்டக் கமிஷன் முடிவைப் பெற்று பிற்பாடு சில திட்டங்களை எடுக்க வேண்டியிருக்கிறது. டிஸம்பருக்குள்ளாக அவர்கள் அனுமதி பெறாமல் இருக்கலாம். பரிசிலனைகள் நடந்து கொண்டி ருக்கலாம். ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சில் ஒரு திட்டம் உருவாக்கப் பட்டால் அவைகளை அடுத்த ஆண்டில்தான், அதாவது ஒரு வருடம் கழித்துத்தான் எடுத்து முடிக்க வேண்டுமென்று சொன்னால் நாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் பெரிய திட்டங்களை நிறைவேற்றியே இருக்க முடியாது. முப்பத் தைந்து கோடி அளவிற்கு நாம் புதுத் திட்டங்களை நிறைவேற்றி இருக்கும் நிலை ஏற்பட்டிருக்காது. நடைமுறை ஆண்டுக்குள்ள மொத்தத் தொகை கேட்டது ரூ. 160 கோடி. க்ராஸ் அப்ராப் பிரியேஷனுக்காகக் கேட்டிருக்கிறோம். இப்பொழுதும் கிராஸ் அப்ராப்பிரியேஷனுக்காக ரூ. 24.69 கோடி கேட்டிருக்கிறோம். ரூ. 160 கோடியோடு, ரூ. 24.69 கோடி அதிகம் இப்பொழுது கேட்கப்படுகிறது என்று கணக்கு வைத்துப் பார்க்க வேண்டும். ரெவின்யூ அக்கவுண்டில் கிடைப்பது ரூ. 117 கோடி வரவு போக அதிகச் செலவிற்குக் கேட்பது ரூ. 6.24 கோடி. காப்பிடல் அக்கவுண்டில் மொத்தம் ரூ. 8.43 கோடி. அதில் வருமானம் போக பாக்கி ரூ. 4.92 கோடி. லோன்ஸ் ஆன்ட் அட்வான்சுக்கு மொத்த மாகக் கேட்பது, திரும்பி வந்துவிடும். அது ரூ. 5.24 கோடி. ஆக

25th March 1961] [Sri C. Subramaniam]

மொத்தம் ரூ. 24 கோடி ஆகிறது. இதைப் பார்த்துவிட்டு அதிகம் என்று சொல்வது தவருன கருத்து. பின், சர்குலேஷன் வான் எதற்காக என்று கேட்கப்பட்டது. பழையதை புதுப்பித்தது. பின், ஹாஸ்டலில் மெத்தை, தலையணை வரவில்லை என்று சொன்னுல் டென்டேர்ஸ் "கால்பார்" செய்யப்பட்டிருக்கிறது. வந்தவுடன் அதைப் பரிசீலனை செய்து வாங்குவதற்கு ஏற்பாடு செய்யப்படும். பின், பாயிலேர்ஸ் சரியாக வேலை செய்யவில்லை என்று சொல்லப்பட்டது. சரியாக வேலை செய்யவில்லையென்ருல் இதை ரிப்பேர் செய்து வைத்துக் கொள்ளவா அல்லது வேறு வாங்கவா என்று பார்க்கலாம். (குறுக்கீடு) திரு. சின்னதுரை அவர்கள் சொல்கிருர்கள், விறகு அடுப்பு வைத்துக் கொள்ளலாம் என்று. பாய்லர்களை விட்டுவிட்டு அண்டாவில் காய்ச்சிக் கொள்ளலாம் என்ருல் ஆள் வைக்க வேண்டும். ஜெயில் டயட் பற்றி திரு. கோவிந்தசாமி அவர்கள் சொன்னுர்கள். சமீபத்தில் அவருக்கு அந்த அனுபவம் இருந்திருக்காது. விலைவாசி அதிக மாகியிருப்பதால் அதிகமாகக் கேட்கப்படுகிறதே தவிர அதை இன்னும் அதிகப்படுத்த வேண்டுமென்ருல், அந்த மான்யம் வரும் போது சொல்லியிருந்தால், கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லியிருப்பார்கள். ஆகவே அதைத் திருப்பி இங்கு சொல்வது அனுவசியம். விலைவாசி அதிகமாக இருக்கிறது என்று எல்லோரும் ஒப்புக்கொள்கிறீர்கள். அதையொட்டிக் கேட்டால் எதற்கு அதிகமாகக் கேட்கிருர்கள் என்கிருர்கள். விலைவாசி அதிகமாகி யிருக்கிறது என்று கேட்கிறீர்களே என்ருல், விலைகள் அதிகமாக வில்லை என்ருல் அதை ஒப்புக் கொள்ளவும் மாட்டார்கள். திரு. ராமசுவாமி முதலியார் அவர்கள் பேசும்போது போக்குவரத்து நகரத்திலுள்ள நெருக்கடியைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அதைக் கவனித்து அதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப் பட்டு வருகிறது. 1961-62-ல் அதற்காகத் தொகையும் ஒதுக் கப்பட்டிருக்கிறது. அதிகமாகச் செலவழிக்க வேண்டுமென்ருல் அதற்கு வகையிருக்க வேண்டும். அப்படியிருந்தால் இன்னும் அதி கப்படியான உபமான்யக் கோரிக்கையைக் கேட்க நான் தயங்கி இருக்க மாட்டேன். இந்தப் பிரச்னையை சர்க்காரும் உணர்ந்திருக் கிறது, அதைத் தீர்க்க எல்லாவிதமான நடவடிக்கையையும் எடுக் கப்பட்டு வருகிறது. மௌண்ட் ரோட், பூந்தமல்லி ரோடு இவை களை விரிவுபடுத்துவது, ஆங்காங்கு ஆட்டோமாட்டிக் ஸிக்னல்ஸ் அமைப்பது போன்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. அந்த முறைகளில் நெருக்கடியை ஓரளவு தீர்க்க முடியும் என்று நினைக்கிறேன். இப்பொழுதுள்ள நெருக்கடி தீர்ந்தால் இன்னும் அதிகம் வளர்ச்சி ஏற்படும்போது இன்னும் அதிக நெருக்கடி ஏற் படும். ஆகவே அதை மனதிற்கொண்டு 15 ஆண்டுகள் கழிந்து நிலைமை எப்படியிருக்கும் என்பதை மனதில் கொண்டு நடவடிக் கைகள் எடுக்க வேண்டுமென்ற முறையில் திட்டம் போடவேண்டு மென்று உத்தரவு இட்டிருக்கிறேம். கனம் எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள், கவுன்சிலில் அதிகமாகச் செலவாகிறது என்று குறிப் பிட்டார்கள். அது அவசியமா இல்லையா என்பதைப்பற்றி நாம் முடிவு செய்ய வேண்டும். அதற்கு முன்னுல் நாம் அதைப்பற்றி ஆட்சேபிப்பது சரியல்ல என்று நினைக்கிறேன்.

அடுத்ததாக, திரு. கோவிந்தசாமி அவர்கள் பியூன்களுக்கு உடுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். இதில் காவலாளர்கள் என்று உபயோகித்திருப்பது ஹாஸ்டலில் உள்ள பியூன்களை அல்ல. இங்கு சட்டசபையில் வேலை பார்க்கும் வாட்ச் அன்ட் வார்ட் நபர்களைப் பற்றித்தான். (ஸ்ரீ க. அன்பழகன்: "காவலாளர்" என்று போட்டிருப்பது சரிதான்.) சரிதான் என்றால் இதை வேறுவிதமாகப் புரிந்துகொண்ட திரு. கோவிந்தசாமி அவர்கள் தமிழைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று தான் எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. முன்னால் வருடம் ஒன்றுக்கு ஒரு உடுப்பு கொடுக்கப்பட்டது. பின்னால் கூடுதலாக ஒரு உடுப்பு கொடுக்க வேண்டும் என்று லெஜிஸ்லேச்சர் டிப்பார்ட் மென்ட்டுக்கு எழுதினார்கள். அந்த முறையில்தான் இந்த உடுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கிறது.

மெட்ரிக் ஸிஸ்டத்தைப் பலர் குறிப்பிட்டார்கள். ஆரம்ப காலத்தில் இதில் சற்று குழப்பமாகத்தான் இருக்கும். நயா பைசா வந்தபோதும் இவ்விதத்தில்தான் குழப்பம் இருந்தது. பின்னால் சரியாகப் போய்விட்டது. அதேபோல் இப்போது சற்று குழப்பம் இருக்கலாம். இது போகப் போக சரியாகிவிடும். இதில் முக்கியமாக இந்த மாறுதல் அவசியமா இல்லையா என்பதைத் தான் நாம் கவனிக்க வேண்டும். இன்றைக்கு நம்முடைய நிலைக்குத் தக்கவாறு, பெரும் தொழில் பெருகவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருக்கின்ற நேரத்தில், அதிலும் தொழில் நுட்பங்கள் எல்லாம் பெருக வேண்டும் என்று நினைக்கின்ற நேரத்தில் இம் மாதிரியான பல மாறுதல்கள் தேவையாகத்தான் இருக்கிறது. இதில் சற்று குழப்பம் ஏற்பட்டிருக்கிறது என்பது மட்டுமல்ல. இதைக் காரணமாக வைத்துக்கொண்டு, வியாபாரிகள் பல வகைகளில் லாபம் அடித்து வருகிறார்கள். அதைத் தடுப்பதற்கு என்ன செய்யலாம் என்பதைப் பற்றியும், அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்பதைப் பற்றியும் ஆலோசித்துக் கொண்டிருக்கிறோம்.

இன்டிகிரேட்டட் மெடிஸனைப்பற்றிக் குறிப்பிட்டு, "இதை அடியோடு நிறுத்திவிட்டீர்களே, இதிலுள்ள ஆசிரியர்கள் என்ன ஆவது, மற்றவர்கள் எல்லாம் என்ன ஆவது" என்றெல்லாம் கேட்டார்கள். வேலை இல்லை என்றால் வீட்டுக்குப் போகவேண்டியது தான். வேலையில்லாத காலத்தில் சம்பளத்தைக் கொடுத்துக் கொண்டிருக்க முடியாது. அவ்விதம் கொடுத்துக் கொண்டிருந்தால் அதையும் யாரும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள்.

ஸீட்-பார்ம்-மைப்பற்றிச் சொன்னார்கள். இன்றைக்கு விதைப் பண்ணைகள் நல்லவிதத்தில் பரிசீலிக்கப்பட்டு, உதவாக்கரையாக இருக்கின்ற விதைப்பண்ணைகளை எல்லாம் நிறுத்திவிட்டு, நல்ல முறையில் இயங்கக்கூடிய விதைப் பண்ணைகளை மட்டும்தான் நடத்திக் கொண்டு வருகிறோம். அதன் காரணமாக லாபம் வரக்கூடிய நிலையிலேயே இப்போதுள்ள விதைப் பண்ணைகள் நடந்து கொண்டிருக்கின்றன.

25th March 1961] [Sri C. Subramaniam]

அடுத்ததாக, போதுமான அளவு இரும்பு, உருக்கு கிடைக்க வில்லை என்று சொல்லப்பட்டது. நம்மிடத்திலேயே இனிமேல் இதற்கான உற்பத்தி பெருகும் என்றிருப்பதால் இனிமேல் போதிய அளவு இரும்பு, உருக்கு கிடைக்கும்; நம்பிக்கை வைக்கலாம் என்று சொல்லப்படுகிறது. அதோடு வேறு எங்காவது உற்பத்தி யானால் மட்டும் போதாது. அதை ரயிலில் கொண்டு வந்து சேர்த் தாக வேண்டும்.

கனம் சின்னதுரை அவர்கள் பேசும்போது, இலாகாக்களில் சரி யான முறையில் சிக்கனம் கையாளப்படவில்லை என்று சொன்னார் கள். புதுக்கோட்டையிலுள்ள செட்டில்மென்டைப் பற்றிச் சொன் னார்கள். ஒரு இடத்தில் செட்டில்மென்ட் வேலையில் ஈடுபட்டிருக் கின்றவர்களை அந்த இடத்தில் வேலை தீர்ந்தவுடன் வேறு இடத் திற்குக் கொண்டு போக வேண்டியிருக்கிறது. முதலாவதாக ஒரு இடத்திற்குப் பணம் ஒதுக்கிக் கொடுக்கிறோம். அதன் பின்னால் வேறு இடத்திற்குப் போகும்போது, அதற்காகத் தனியாகப் பணம் ஒதுக்கப்படுகிறது. இந்த அடிப்படையில் பல இடங்களில் இந்த செட்டில்மென்ட் பார்ட்டி வேலை செய்கிறது.

அடுத்ததாக, ஜி.எஸ்.ஐ.எம். கோர்ஸையும் எம்.பி.பி.எஸ். கோர்ஸையும் ஏன் ஒன்றாகச் சேர்த்துவிடக்கூடாது என்று கேட்கப்பட்டது. இதை நாம் முடிவு செய்ய முடியாது. சர்வகலா சாலை யோசித்து முடிவு செய்ய வேண்டும். இண்டியன் மெடிக்கல் கௌன்ஸிலும் இதைப்பற்றி முடிவு செய்ய வேண்டும். இதைப் பற்றி யூனிவர்சிட்டிக்கும், சர்க்காருக்கும் கடிதப் போக்குவரத்து நடந்து கொண்டிருக்கிறது.

ஸ்ரீமதி அனந்தநாயகி அவர்கள், பேசும்போது, ஏதோ அவர் கள் ஒரு கட்டிடம் கட்டிக் கொடுத்திருப்பதாகவும் அதைப் பிரைமரி ஹெல்த் சென்டர் ஆரம்பிப்பதற்காகச் சர்க்கார் உபயோ கிக்கவில்லை என்றும் கூறினார்கள். அதை கவனிக்க வேண்டும் என்று கனம் சுகாதார அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். ஆனால் இதில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். கட்டிடம் இருக்கிறது என்பதற்காக பிரைமரி ஹெல்த் சென்டரை ஆரம்பிக்க முடியாது. விரல் இருக்கிறது என்பதற்காக வடை சுட்டுக் கொண்டிருக்க முடியாது. அவ்விதம் ஆரம்பித்துவிட்டால் 5,000 ரூபாய் செலவில் எல்லோரும் ஒரு கட்டிடத்தைக் கட்டி விட்டு அதில் பிரைமரி ஹெல்த் சென்டர் வேண்டும் என்று கேட்க ஆரம்பித்துவிடுவார்கள். அதோடு பிரைமரி ஹெல்த் சென்டர் ஆரம்பிப்பது அந்தந்த இடத்திலுள்ள மக்களுடைய விருப் பத்தைப் பொறுத்தது. ஆங்காங்கு இருக்கின்ற மக்களாகவே முடிவு செய்து இந்த இடத்திற்கு வேண்டும் என்று கேட்கும் போது அதற்காக அந்த இடத்தில் ஆரம்பிக்க வேண்டுமா என்பதைப்பற்றி ஆலோசித்து முடிவு செய்து ஆரம்பிக்கிறார்கள். இந்தக் கட்டிடத்தைப் பொறுத்த அளவில், மிகவும் அழகான கட்டிடம் என்று குறிப்பிட்டார்கள். இதில் பிரைமரி ஹெல்த் சென்டர் ஆரம்பிக்க வேண்டிய முயற்சி எடுக்க வேண்டும் என்று கனம் சுகாதார அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri C. Subramaniam] [25th March 1961

அடுத்தாக, பஞ்சாயத்துக்களுக்கு (எலக்டரால் ரோல்) வாக்காளர் பட்டியல் கொடுப்பதைப் பற்றிச் சொன்னார்கள். முன்னால் இதற்காகப் பஞ்சாயத்துக்களுக்குப் பணம் கொடுத்துக் கொண்டிருந்தோம். இப்போது அதைச் சர்க்காரே ஏற்றுக் கொள்வது என்று முடிவு செய்திருக்கிறோம். ஆனால் முன்னால் போடப்பட்ட தலைப்பின் கீழ்தான் இந்தத் தொகை காண்பிக்கப் பட்டிருக்கும். இல்லையென்றால் இதிலுள்ள மீதிப் பணத்தை கஜானாவில் கட்டிவிட்டு, அதன்பின்னால் இதற்காகத் தனி மான்யத்தை இந்தச் சபையில் கொண்டு வந்து கேட்டுத்தான் பெற வேண்டும். ஆகவே இதில் அதிகச் செலவு இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த அடிப்படையில் பார்ப்போமானால், இன்றைக்குக் கொண்டுவந்திருக்கக்கூடிய மானியமானது, அவசியம் இல்லாதது, அல்லது அலட்சியமானது, அல்லது அஜாக்கிரதையானது என்று சொல்லக்கூடிய அளவில் கொண்டு வரப்பட்டிருப்பது அல்ல. திட்டங்கள் எல்லாம் உடனடியாக நிறைவேற வேண்டும் என்றால் இம்மாதிரியான உபமான்யங்களைக் கொண்டு வரவேண்டியதாகத் தான் இருக்கிறது. ஆகவே இம்மாதிரியான உபமான்யங்கள் கொண்டு வருவதின் முக்கிய காரணம் ஏதாவது ஒரு திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்றால் அதற்காக மார்ச் 31-ம் தேதி வரை காத்திருக்காமல் அந்தந்தச் சமயங்களில் விரைவில் திட்டங்களை நிறைவேற்ற வேண்டும் என்கின்ற அடிப்படையில் செலவு செய்ய வேண்டியிருப்பதுதான். ஆகவே இந்த உபமான்யக் கோரிக்கைகளை சபை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்வதோடு, அடுத்த ஆண்டுகளிலும் இம்மாதிரியான உபமான்யங்களைச் சர்க்கார் பல திட்டங்களை நிறைவேற்றுகின்ற முறையில் கொண்டுவருவதற்கு இந்த சபையிலுள்ளவர்கள் சர்க்காரை நிர்ப்பந்தம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

**Sri A. GOVINDASAMY** : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, சட்டப் பேரவை மான்யத்தின் நான்காவது பிரிவில், காவலாளர் என்று சொல்லப்பட்டிருப்பது போலீஸ்காரர்களைப் பற்றியது என்று இப்போது மான்யத்தின் கனம் அமைச்சர் குறிப்பிட்ட பிறகு எனக்கு விளக்கமானது. சட்டசபையின்கீழ் இருக்கின்ற ஹாஸ்டல்களைப் பற்றி குறிப்பிட்டுவிட்டு, உடனடியாக அடுத்ததாக இருந்ததால், ஹாஸ்டலில் உள்ள பியூன்களைத்தான் குறிப்பிடுவதாக இருக்கும் என்று நினைத்து நான் அதைப்பற்றிப் பேசினேன். அதை வைத்துக்கொண்டு நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் எனக்கு தமிழே தெரியாது என்று சொல்லி எப்போதும் போல் உபாத்தியாயர் தொழில் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். அதைப் பற்றி கவலையில்லை. இதில் போலீஸை குறிப்பிடுவதற்காக காவலாளர் என்று போட்டிருப்பதை, நாங்கள் சொல்லுகிறோம் என்ற காரணத்திற்காக எடுத்துவிட வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.